අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2016 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2016 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2016

හින්දු ධර්මය I
இந்து சமயம் I
Hinduism I

42 T I

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
Two hours

**அறிவுறுத்தல்கள்:**

* **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
* விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை எழுதுக.**
* விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.
* **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் **புள்ளடி** (×) இடுவதன் மூலம் காட்டுக.

● **01** தொடக்கம் **05** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து** விடயங்கள் வீதம் தரப்பட்டுள்ளன. அவற்றுள் **ஒன்று** ஏதோவொரு காரணத்தினால் ஏனையவற்றுடன் பொருந்தாது. **பொருந்தாததைத்** தெரிவுசெய்க.

**1.** (1) விநாயகர் (2) எழுத்தாணி பிடிக்கும் கரம் (3) மோதகம்
(4) டமருகம் (5) அமுதகலசம்

**2.** (1) உடுக்கு (2) தம்புரா (3) வீணை
(4) புல்லாங்குழல் (5) பறைமேளம்

**3.** (1) சாங்கியம் (2) ஜைனம் (3) வேதாந்தம்
(4) நியாயம் (5) சைவசித்தாந்தம்

**4.** (1) ஐஸ்வர்யம் (2) பலம் (3) வீரியம்
(4) தேஜஸ் (5) யோகம்

**5.** (1) கடையிற் சுவாமிகள் (2) செல்லப்பா சுவாமிகள் (3) சிவவாக்கியர்
(4) நவநாதசித்தர் (5) சித்தானைக்குட்டிச் சுவாமிகள்

● **06** தொடக்கம் **10** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து** சோடிச் சொற்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் ஒரு சோடியிலுள்ளவை ஒன்றுடன் ஒன்று பொருந்தவில்லை. **பொருந்தாத** அச்சோடிச் சொல்லைத் தெரிவுசெய்க.

**6.** (1) சாங்கியம் - கபிலர்
(2) கேவலாத்துவிதம் - சங்கரர்
(3) துவைதம் - மத்துவர்
(4) யோகம் - பதஞ்சலி
(5) விசிட்டாத்வைதம் - வல்லபர்

**7.** (1) ஸ்ரீபாஷ்யம் - பிரபத்தி
(2) திருவாசிரியம் - நம்மாழ்வார்
(3) மாமல்லபுரம் - 1ஆம் ராஜராஜசோழன்
(4) சிவானந்த நடனம் - ஆனந்தக்குமாரசுவாமி
(5) யாழ்நூல் - விபுலானந்தர்

**8.** (1) உமாபதிசிவாசாரியார் - திருவருட்பயன்
(2) காளிதாசர் - சாகுந்தலம்
(3) இராஜேந்திரசோழன் - வானவன்மாதேவீஸ்வரம்
(4) ஹரப்பா - சேர் ஜோன் மார்ஷல்
(5) சிம்மவிஷ்ணு - மதுரை மீனாட்சியம்மன்

**9.** (1) இருக்கு வேதம் - ஐதரேயப் பிராமணம்
(2) அதர்வவேதம் - சாமவிதானப் பிராமணம்
(3) கிருஷ்ணயசுர் வேதம் - தைத்திரியப் பிராமணம்
(4) சுக்கிலயசுர் வேதம் - சதபதப் பிராமணம்
(5) சாமவேதம் - சாந்தோக்கியப் பிராமணம்

[பக். 2 ஐப் பார்க்க

10. (1) இராமாயணம் - 7 காண்டம் 2 400 சுலோகம்
(2) அதர்வவேதம் - 20 காண்டம் 731 சூக்தம்
(3) சாமவேதம் - 1 649 பாடல்கள்
(4) யசுர்வேதம் - 101 சாகைகள்
(5) இருக்குவேதம் - 10 மண்டலம் 1 028 சூக்தம்

- **11** தொடக்கம் **15** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் **'அ'**, **'ஆ'** என்னும் நிரல்களின் கீழ் சில விடயங்கள் தரப்பட்டுள்ளன. **'அ'** நிரலுக்கு ஏற்ற விதத்தில் **'ஆ'** நிரல் பொருத்தமாக ஒழுங்குபடுத்தப்பட்டுள்ள சேர்மானத்தைத் தெரிவுசெய்க.

11.

| அ | ஆ |
|---|---|
| (i) மகேந்திரவர்மன் | A - சங்கரபக்தன் |
| (ii) பரமேசுவரவர்மன் | B - சிவபாதசேகரன் |
| (iii) 2ஆம் நரசிம்மவர்மன் | C - க்ஷேதகாரி |
| (iv) 3ஆம் சிம்மவர்மன் | D - வித்தியாவிநீதன் |
| (v) சோழ அரசர் | E - ஐயடிகள் காடவர்கோன் |

(1) ADECB (2) CDAEB (3) CDBEA (4) CEDAB (5) EDABC

12.

| அ | ஆ |
|---|---|
| (i) சிவபுராணங்கள் | A - நான்கு |
| (ii) விஷ்ணுபுராணங்கள் | B - ஒன்று |
| (iii) அக்கினிபுராணம் | C - இரண்டு |
| (iv) சூரியபுராணம் | D - ஒன்று |
| (v) பிரமபுராணம் | E - பத்து |

(1) BDCAE (2) BDEAC (3) BEACD (4) DBACE (5) EABDC

13.

| அ | ஆ |
|---|---|
| (i) படைத்தல் | A - மோதகம் இருக்கும் கரம் |
| (ii) காத்தல் | B - அமுதகலசம் |
| (iii) அழித்தல் | C - பாசம் கொண்டிருக்கும் கை |
| (iv) அருளல் | D - எழுத்தாணி பிடிக்கும் கரம் |
| (v) மறைத்தல் | E - அங்குசம் ஏந்திய கை |

(1) ADECB (2) CEDAB (3) DAEBC (4) DBACE (5) DEABC

14.

| அ | ஆ |
|---|---|
| (i) இந்திய மருத்துவத்தின் தந்தை | A - தன்வந்திரி |
| (ii) இந்திய அறுவைச்சிகிச்சையின் தந்தை | B - சபாபதி |
| (iii) செகராசசேகரமாலை | C - சுஸ்ருதர் |
| (iv) சந்தான தீபிகை | D - இராமலிங்க முனிவர் |
| (v) சந்தானமணி | E - சோமசன்மா |

(1) ACEBD (2) ACEDB (3) AECDB (4) BDCAE (5) CDBEA

15.

| அ | ஆ |
|---|---|
| (i) ஆசாரமே மேலான தர்மம் | A - முண்டக உபநிடதம் |
| (ii) ஸ்வதர்மவே நிதனம் சிரேயஹ | B - மகாபாரதம் |
| (iii) அஹிம்சையே மேலான தர்மம் | C - மனுஸ்மிருதி |
| (iv) சத்யம் ஏவ ஜயதே | D - தைத்திரிய உபநிடதம் |
| (v) சத்யம் வத தர்மம் சர | E - பகவத்கீதை |

(1) ABCED (2) BECAD (3) CEBAD (4) DEBCA (5) EBACD

- **16** தொடக்கம் **25** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் அதன் கீழே தரப்பட்டுள்ளவற்றுள் மிகப் பொருத்தமான விடையைத் தெரிவுசெய்க.

16. 'கரகம்' என்பதற்கு வழங்கப்படும் இன்னுமொரு பெயர்
(1) பூம்பந்தல் (2) காவடி (3) அனுமார்வசந்தன்
(4) அடுக்கு (5) கொம்புமுறி

[பக். 3 ஐப் பார்க்க

**17.** வைணவம் கூறும் பஞ்சஸமஸ்கார வழிபாட்டினுள் **அடங்காதது**
(1) முத்திரை தரித்தல் (2) திருமண்காப்பு
(3) திருமந்திர உபதேசம் (4) திருவாராதணம்
(5) சரமசுலோகம்

**18.** 'ஓம் நாராயணாய நமஸ்கிருதய' என ஒவ்வோர் அத்தியாயமும் ஆரம்பிக்கும் நூல்
(1) இராமாயணம் (2) மகாபாரதம்
(3) ஐதரேயப் பிராமணம் (4) விஷ்ணுபுராணம்
(5) மஹாநாராயண உபநிடதம்

**19.** கிராமியத் தெய்வங்களை மாத்திரம் கொண்ட தொகுதி
(1) கண்ணகி அம்மன், நாச்சிமார், பெரியதம்பிரான், மாரியம்மன்
(2) கண்ணகி அம்மன், மனோன்மணி, நாச்சிமார், பைரவர்
(3) நாச்சிமார், பெரியதம்பிரான், வீரபத்திரர், புவனேஸ்வரி
(4) மாரியம்மன், ஐயனார், தட்சிணாமூர்த்தி, பெரியதம்பிரான்
(5) கலியாணசுந்தரர், காளி, கண்ணகி அம்மன், நாச்சிமார்



**20.** இலங்கையில் கண்டன நூல்களை இயற்றியவர்களின் தொகுதி
(1) ஆறுமுகநாவலர், ஞானப்பிரகாசர், காசிவாசி செந்திநாதையர்
(2) சங்கரபண்டிதர், சி. வை. தாமோதரம்பிள்ளை, ஞானப்பிரகாசர்
(3) ஆறுமுகநாவலர், காசிவாசி செந்திநாதையர், மேலைப் புலோலி நா. கதிரவேற்பிள்ளை
(4) சங்கரபண்டிதர், ஞானப்பிரகாசர், ஆறுமுகநாவலர்
(5) மு. திருவிளங்கதேசிகர், சுவாமிநாதபண்டிதர், ஆறுமுகநாவலர்

**21.** மத்துவரின் வேதாந்தக் கொள்கை பற்றிய சரியான கூற்று
(1) ஈசுவரன், சீவன் என இரண்டு பொருட்களை மட்டும் உட்பொருளாக ஏற்கிறது.
(2) சைவச்சார்புடைய தத்துவக் கொள்கையாகும்.
(3) துவைதக் கோட்பாட்டு நூல்களின் தொகுதியை சர்வமூலம் என்கிறது.
(4) துவைத வேதாந்தம் அடிப்படையில் பேதாபேதவாதமாகும்.
(5) துவைத வேதாந்தமானது கி.பி. 8 - 9 ஆம் நூற்றாண்டுகளில் கோட்பாடாக உருவாகியது.

**22.** இலங்கையில் 20ஆம் நூற்றாண்டில் தோன்றிய இந்துசமய பத்திரிகைகளின் தொகுதி
(1) சைவக்காவலன், மெய்கண்டார் நெறி, இந்து சாதனம்
(2) சைவசித்தாந்த பானு, விவேகானந்தன், சிவதொண்டன்
(3) சிவதொண்டன், இலங்கைநேசன், சைவக்காவலன்
(4) சைவசித்தாந்த பானு, சைவக்காவலன், உதயதாரகை
(5) சிவதொண்டன், சைவசித்தாந்த பானு, இந்துசாதனம்

**23.** நம்மாழ்வார் பாடிய பாடல்கள் அடங்கிய தொகுதி
(1) திருவிருத்தம், திருவாசிரியம், பெரியதிருவந்தாதி, திருவாய்மொழி
(2) திருவாசிரியம், திருவாய்மொழி, திருப்பாவை, திருவிருத்தம்
(3) பெரியதிருவந்தாதி, பெரியாழ்வார் திருமொழி, திருவிருத்தம், திருவாசிரியம்
(4) திருப்பல்லாண்டு, திருவாசிரியம், திருவாய்மொழி, திருவிருத்தம்
(5) திருப்பாவை, பெரியதிருவந்தாதி, திருவாய்மொழி, திருவிருத்தம்

**24.** 20ஆம் நூற்றாண்டில் இலங்கையில் சைவசமய வளர்ச்சிக்குப் பணிபுரிந்த நிறுவனங்கள்
(1) விவேகானந்த சபை, யாழ்ப்பாணம் சைவபரிபாலன சபை, ஆரிய சமாஜம்
(2) விவேகானந்த சபை, சைவவித்தியா விருத்திச் சங்கம், சைவ மங்கையர் கழகம்
(3) சிலாபம் இந்து வாலிபர் சங்கம், சைவ மங்கையர் கழகம், சைவப்பிரகாச சபை
(4) விவேகானந்த சபை, இராமகிருஷ்ண மிஷன், சைவப்பிரகாச சமாஜம்
(5) அகில இலங்கை இந்துமாமன்றம், சைவ மங்கையர் கழகம், சைவப்பிரகாச சபை

**25.** பின்வருவனவற்றுள் திருக்குறள் பற்றிய **தவறான** கூற்று
(1) இது சங்கமருவிய காலத்துக்குரிய நூலாகக் கருதப்படுகிறது.
(2) ஒழுக்கத்துக்கு முக்கிய இடம் வழங்கியுள்ளதொரு நூலாகும்.
(3) இதில் பொருளீட்டுவதற்கும் அனுபவிப்பதற்குமான துணைக் காரணமாக அரச நீதி கூறப்பட்டுள்ளது.
(4) இந்நூலில் ஆணுக்கு நிகரானவளாகப் பெண் பேசப்படுகிறாள்.
(5) ஒருவன் இல்லறம், துறவறம் ஆகிய இரு நெறிகளில் நின்றாலும் செய்வினையின் பயனை அனுபவித்தே தீரவேண்டுமென்கிறது.

[பக். 4 ஐப் பார்க்க

1847

- **26** தொடக்கம் **30** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் ஒரு தலைப்பின் கீழ் ஐந்து விடயங்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் உரிய தலைப்புடன் **பொருந்தாததைத்** தெரிவுசெய்க.

**26.** **பசுபதிச் செட்டியார்**
(1) சைவபரிபாலன சபையின் பொருளாளர் ஆவார்.
(2) இந்து வாலிப சமாசத்தை உருவாக்கியவர்.
(3) திருக்கேதீச்சர ஆலயத் திருப்பணியில் ஈடுபட்டவர்.
(4) சைவவித்தியா விருத்திச் சங்க நிறுவுனர் ஆவார்.
(5) யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரியின் ஸ்தாபகர்களில் ஒருவராவார்.

**27.** **பண்ணிசையின் சிறப்பு**
(1) தேவார முதலிகளால் பண்ணிசை வளமூட்டப்பட்டது.
(2) கர்நாடக இசையில் பண், இராகம் என வழங்கப்படுகிறது.
(3) விஜயநகரப் பேரரசு காலத்தில் தமிழகத்தில் அறிமுகமாகியது.
(4) உற்சவ காலங்களில் நவசந்திப்பண் இசைத்தல் பிரதானமானது.
(5) பண்ணிசை பற்றிக் கூறும் முக்கிய நூலாக பஞ்சமரபு திகழ்கின்றது.

**28.** **தீட்சை**
(1) சமய தீட்சை என்பது பிரவேச தீட்சை என்றும் அழைக்கப்படும்.
(2) நிர்வாண தீட்சையை விடவும் விசேட தீட்சை மகத்துவம் நிறைந்தது.
(3) தீட்சை அளிக்கும் தகுதி ஆசாரிய அபிடேகம் பெற்ற குருவுக்கே உண்டு.
(4) சமய தீட்சை பெற்றவரே உருத்திராக்கம் அணியும் அருகதை உடையவர்.
(5) பாசத்தைக் கெடுத்து ஞானத்தைக் கொடுக்கும் முறையே தீட்சையாகும்.

**29.** **சைவசித்தாந்தத்தில் ஆணவம்**
(1) இருளிலும் கொடியதென்பர்.
(2) ஆன்மாவின் குணமாக நிற்கும்.
(3) அகந்தைக்கும் மமதைக்கும் காரணமாகும்.
(4) ஆன்மாவை சிற்றறிவும், சிறு செயலும் உடையதாக்கும்.
(5) விகற்பம், கற்பம் முதலிய எட்டுக் குணங்களை உடையது.

**30.** **தருமபுர ஆதீனம்**
(1) கி.பி. 1560ஆம் ஆண்டு நமசிவாய மூர்த்திகளால் தோற்றுவிக்கப்பட்டது.
(2) ஞானசம்பந்தன் எனும் மாதப்பத்திரிகையை வெளியிடுகின்றது.
(3) சித்தாந்தக் கல்லூரி அமைத்து சைவ சித்தாந்த கருத்துகளைப் பரப்புகிறது.
(4) தேவாரப் பாடசாலையை நிறுவி தெய்வத்தமிழ் வளர்க்கிறது.
(5) தஞ்சை மாவட்டத்தில் மயிலாடுதுறைக்குக் கிழக்கே அமைந்துள்ளது.

- மேல்வரும் பகுதியில் தரப்பட்டுள்ள சொற்களுள் இவ்விரண்டு சொற்கள் குறிப்பிட்டவொரு விடயத்தோடு தொடர்புடையவை. அவற்றின் பொருத்தப்பாட்டின் அடிப்படையில் **31** தொடக்கம் **35** வரையுள்ள ஒவ்வொரு வினாவுக்கும் பொருத்தமான சேர்மானத்தைத் தெரிவுசெய்க.

| | | | | |
|---|---|---|---|---|
| A<br>உதயகிரி | B<br>ஈசான பண்டிதர் | C<br>மானசாரம் | D<br>ஜலசயனம் | E<br>குருஞான சம்பந்தர் |
| F<br>ஆகமம் | G<br>இராஜசிம்மன் | H<br>ஏரன் | I<br>வேதவிருத்தி | J<br>சித்தாந்த சிகாமணி |

**31.** இந்து விக்கிரகக் கலையுடன் தொடர்புடைய விடயங்கள் அடங்கும் தொகுதி
(1) AG (2) CF (3) CG (4) DF (5) DG

**32.** நாயக்கர் கால சைவ ஆதீனங்களுடன் தொடர்புடைய தொகுதி
(1) AH (2) BJ (3) CH (4) EI (5) EJ

**33.** குகைக் கோயில்களுடன் தொடர்புடைய தொகுதி
(1) AG (2) AH (3) BF (4) DH (5) DI

**34.** சோழர் காலத்து இந்து சமய வளர்ச்சி நிலையுடன் தொடர்புடைய தொகுதி
(1) AI (2) BI (3) BJ (4) EG (5) EJ

**35.** பல்லவர் காலக் கட்டடக்கலையுடன் தொடர்புடைய தொகுதி
(1) AF (2) AG (3) BI (4) DG (5) EG

[பக். 5 ஐப் பார்க்க

- இந்து சமயம் கூறும் வினை மற்றும் அறம் பற்றிய கருத்தியல்கள் சில கீழே தரப்பட்டுள்ளன. அவற்றை அடிப்படையாகக் கொண்டு **36** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் பொருத்தமான சேர்மானத்தைத் தெரிவுசெய்க.

**சைவசித்தாந்த நோக்கில் வினை**

A - சைவசித்தாந்தத்தில் பிராரத்துவ வினையானது விதி, நியதி, ஊழ், தெய்வம் என்ற பெயர்களால் சுட்டப்படுகிறது.
B - தன்முனைப்பின்றி ஆற்றப்படுகின்ற செயலைப் பற்றற்ற வினை அல்லது நிஷ்காமிய கர்மம் என்பர். இது பலனை விளைவிக்காததாகும்.
C - பிராரத்துவ வினை அனுபவத்திற்கு வரும்போது ஆதிதெய்விகம், ஆதிபௌதிகம், ஆதி ஆத்மிகம் என மூவகைகளில் வரும்.
D - பிராரத்துவ வினைப்பயனை ஒருவன் இப்பிறவியில் அனுபவிக்கும்போது அவனால் ஆற்றப்படும் புதிய வினைகள் ஆகாமியம் எனப்படும். இதனையே எதிர்வினை அல்லது புதிய வினை என்பர்.
E - ஒருவனுக்கு இப்பிறவியில் ஆகாமியத்தினைத் தீர்மானிக்கும் உரிமை உண்டு.
F - வெறுவினைகள் பயன் விளைவிக்காச் செயல்களாகும்.

**36.** சைவசித்தாந்த நோக்கில் விதியுடன் தொடர்புடைய கூற்றுகள் அடங்கிய சேர்மானம்
(1) AC (2) AD (3) BE (4) CD (5) CF

**37.** சைவசித்தாந்தக் கண்ணோட்டத்தில் 'எதிர்வினை' என்ற கருத்தியலுடன் தொடர்புடைய கூற்றுகளின் சேர்மானம்
(1) AB (2) BF (3) CE (4) DE (5) DF

**38.** சைவசித்தாந்த நோக்கில் வினையானது பிறவியை உண்டுபண்ணுதலுடன் **தொடர்பற்ற** கூற்றுகளின் சேர்மானம்
(1) AD (2) BF (3) CD (4) DE (5) EF

**ஔவையார்**

A - சங்ககால ஔவையார் அதியமானிடமிருந்து நெல்லிக்கனி பெற்றவர்.
B - திருவள்ளுவர் கதை, கபிலரகவல், ஞானாமிர்தம் முதலிய நூல்களில் ஔவையார் பற்றிய குறிப்புகள் உள்ளன.
C - ஆத்திசூடி எனும் நூல் 108 அறங்களைக் கூறுகின்றது. அதனை அஷ்டோத்திர நீதிநூல் எனவும் கூறுவர்.
D - நல்வழியில் திருநீற்றின் பெருமை, நடுவுநிலைமை, பிறனில்விழையாமை, தருமத்தின் அவசியம் போன்ற விடயங்கள் இடம்பெற்றுள்ளன.

**39.** ஔவையாரின் வரலாற்றோடு தொடர்புடைய சேர்மானம்
(1) AB (2) AC (3) AD (4) BC (5) BD

**40.** ஔவையாரின் நூல்களில் இழையோடியுள்ள அறவியற் கருத்துகளின் சேர்மானம்
(1) AC (2) AD (3) BC (4) BD (5) CD

- **41** தொடக்கம் **50** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் ஒரு தலைப்பின் கீழ் ஐந்து விடயங்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் தலைப்புக்கு மிகப்பொருத்தமானதைத் தெரிவுசெய்க.

**41.** **பகவத்கீதையில் கர்மயோகம்**
(1) தாஸ்யம் முதலான ஆறு பாவங்களில் கூறப்படுகின்றது.
(2) 13 - 18 ஆம் அத்தியாயம் வரையிலான பகுதியில் விரிவாக விளக்கப்பட்டுள்ளது.
(3) ஆசாரபக்தி, பிரபக்தி என இருநிலைகளைக் கொண்டது.
(4) ஸ்வதர்மத்தின் வழியே ஸ்ரீ கிருஷ்ணரால் எடுத்தாளப்பட்டுள்ளது.
(5) பரவித்தை, அபரவித்தை பற்றிச் சிறப்பாகப் பேசுகிறது.

**42.** **ஞானம்**
(1) சங்கரரின் அத்வைதம் வீடு பேறடைவதற்கு முக்கிய வழி ஞானமே என்று கூறுகிறது.
(2) பிரகிருதி, புருஷன் ஆகியவற்றுள் ஒன்றை அறிவதே ஞானம் என்று பகவத்கீதை குறிப்பிடுகிறது.
(3) தன்னலமற்ற அன்புநெறியே ஞானம் எனப்படும்.
(4) பிரமஞானம் அபரவித்தை எனப்படுகின்றது.
(5) சைவ சித்தாந்தத்தில் ஞானம் என்பது அருவுருவத் திருமேனியை வழிபடுதலைக் குறிக்கும்.

**43.** **ஆச்சிரமதர்மங்கள்**
(1) வானப்பிரஸ்தநிலை என்பது சந்நியாச நிலைக்கான பயிற்சிக்காலமாகும்.
(2) பிதிர்யக்ஞம் என்பது உருவ வடிவான கடவுளுக்கு ஆற்றும் வழிபாடாகும்.
(3) குருகுலக் கல்வியின் பிரதான நோக்கம் மாணவனுக்கு உலகியற் பேறுகளை வழங்குதலாகும்.
(4) ஐவகை வேள்விகளும் சந்நியாச நிலையில் உள்ளவர்களால் ஆற்றப்பட வேண்டியவையாகும்.
(5) இந்து ஒருவனின் வாழ்வில் மூன்றாம் படிநிலை கிருஹஸ்தம் ஆகும்.

[பக். 6 ஐப் பார்க்க

**44. தட்சணாமூர்த்தி சுட்டும் தத்துவம்**

(1) சிவாலயங்களில் தென்திசை நோக்கி வீற்றிருப்பவர்.
(2) இறைவன் குருவாக எழுந்தருளிய வடிவமாகிய இது சிவமூர்த்தங்களுள் ஒன்றாக விளங்குகிறது.
(3) வியாக்யான தட்சணாமூர்த்தி சிவாலயங்களில் அதிகமாகக் காணப்படும்.
(4) பசுவானது பாசத்திலிருந்து நீங்கிப் பதியை அடைதலைச் சுட்டுகிறது.
(5) யோக தட்சணாமூர்த்தி, ஞான தட்சணாமூர்த்தி, வியாக்கியான தட்சணாமூர்த்தி, வீணாதர தட்சணாமூர்த்தி என நான்கு வகைப்படும்.

**45. பிரமசூத்திரத்தின் பொருள் மரபு**

(1) பாதராயணர் என்பவரால் இயற்றப்பட்டது.
(2) தர்க்க முறைகளுக்கான திறவுகோலாக அமைந்துள்ளது.
(3) வேதாந்த சூத்திரம் என்ற பெயரினாலும் வழங்கப்படுகின்றது.
(4) பிரமசூத்திரம் என்பது பிரம்மாவாகிய பரம்பொருளைப் பற்றி விளக்கும் நூற்பாவாலான நூல் எனப் பொருள்படும்.
(5) பிரபஞ்சத்தின் தோற்றம், பிரம்மஞானத்தை அடைவதற்கான வழிமுறைகள் ஆகியவற்றை உள்ளடக்கியுள்ளது.

**46. சாந்த பாவம்**

(1) நண்பர்களுக்கிடையிலான உயர்ந்த நட்பைக் குறித்து நிற்கிறது.
(2) மனைவி கணவனிடத்தில் கொள்ளும் அன்பை உணர்த்தி நிற்கிறது.
(3) காதலர்களுக்கிடையில் தோன்றும் நேசத்தைப் புலப்படுத்தி நிற்கிறது.
(4) குழந்தைக்குத் தாய்மேல் உள்ள பாசத்தை உணர்த்தி நிற்கிறது.
(5) தாய், குழந்தை மீது கொண்டுள்ள பாசத்தை உணர்த்தி நிற்கிறது.

**47. புலக்காட்சி**

(1) புலக்காட்சி மூலம் பெறப்படும் அறிவு ஊடக அறிவாகும்.
(2) புலக்காட்சியின் அறிவுப் படிநிலையில் ஹேதுவும் ஒன்றாகும்.
(3) குறித்த பொருளை அதன் விசேட குணாம்சங்களுடன் அறிவது சவிகல்ப புலக்காட்சி ஆகும்.
(4) புலக்காட்சியினை ஆகம அளவை என்றும் அழைப்பர்.
(5) மந்திரம், தந்திரம், உபதேசம் ஆகிய மூன்று வகைகளில் புலக்காட்சி அமையும்.

**48. கண்ணகி வழிபாடு**

(1) இவ் வழிபாட்டின் தோற்றமும் முதன்மையும் மணிமேகலையுடன் ஆரம்பமாகிறது.
(2) சேரன் செங்குட்டுவன் கி.பி. 5ஆம் நூற்றாண்டில் கண்ணகிக்கு விழா எடுத்தான்.
(3) ஊர்காவல் பண்ணுதல், மடை வைத்தல் என்பன இறுதி நாள் சடங்காக நடைபெறும்.
(4) நோய் நீக்கம், மழைவளம், பயநீக்கம் முதலியவற்றுக்காக கண்ணகியை வழிபடுவர்.
(5) கண்ணகி வழிபாட்டில் கதவு திறந்த பின்னர் ஏடுபடித்தல் இடம்பெறுவதில்லை.

**49. போகிப் பண்டிகை**

(1) பழையன கழிதலும் புதியன புகுதலும் என்ற மொழிக்கேற்ப கொண்டாடப்படுகிறது.
(2) சூரியன் தனு இராசியிலிருந்து மகரராசிக்குச் செல்லும் நாளாகும்.
(3) சூரிய பகவானுக்கு நன்றி செலுத்தும் நாளாகக் கொள்ளப்படுகிறது.
(4) மாடுகளை அலங்கரித்து விருந்தளித்து வழிபடும் நாளாகும்.
(5) உழவர் திருநாள் என்றும் அழைக்கப்படும்.

**50. இந்து வழிபாட்டு முறையில் மருத்துவம்**

(1) ஆத்திரேயர் ஆயுர்வேத நூலொன்றை இயற்றினார்.
(2) இராமாயணத்தில் மருத்சஞ்சீவினி மூலிகை பற்றிப் பேசப்பட்டுள்ளது.
(3) அதர்வ வேதத்தில் வரும் பேஷஜானி சூக்தம், ஆயுஷ்யானி சூக்தம் முதலான பகுதிகளில் மருத்துவ சிந்தனைகள் காணப்படுகின்றன.
(4) சரகசம்ஹிதையில் 149 வகையான நோய்கள், அவற்றின் அறிகுறிகள், சிகிச்சை முறைகள் என்பன கூறப்பட்டுள்ளன.
(5) தோப்புக்கரணம், அட்டாங்க மற்றும் பஞ்சாங்க நமஸ்காரம், கிரிவலம் செல்லுதல் போன்றவற்றால் நோய்கள் குணமடைகின்றன.

* * *

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2016 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2016 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2016

| | | | |
|---|---|---|---|
| හින්දු ධර්මය II<br>இந்து சமயம் II<br>Hinduism II | 42 T II | පැය තුනයි<br>மூன்று மணித்தியாலம்<br>Three hours |

**அறிவுறுத்தல்கள்:**

※ **பகுதி I** இல் **இரண்டு** வினாக்களையும், **பகுதி II** இல் **மூன்று** வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.

## பகுதி I

**1.** "இந்துசமய இலக்கியங்களுள் வேதங்கள் மிகவும் தொன்மை வாய்ந்த புனித நூல்களாகும்."

(அ) வேதம் என்ற சொல்லின் பொருள் யாது ?

(ஆ) வேதங்களின் மறுபெயர்கள் யாவை ?

(இ) வேதகால சமயநிலை பற்றி விளக்குக.

(ஈ) இருக்குவேத தத்துவக் கருத்துகள் தொடர்பாக விபரிக்குக.

**2.** "சிவாகமங்கள், சைவத் திருக்கோயில் அமைப்பு முறைகளையும் சிவாலயக் கிரியை முறைகளையும் சிறப்பாக விளக்குகின்றன."

(அ) ஆகமங்களின் சிறப்பியல்புகளைக் குறிப்பிடுக.

(ஆ) ஆகமம் கூறும் பொருள் மரபினை விளக்குக.

(இ) சிவாகமம் புலப்படுத்தும் ஆலய அமைப்பு முறை பற்றி ஆராய்க.

(ஈ) கொடியேற்றக் கிரியை சுட்டும் சைவசித்தாந்த விளக்கத்தினை விபரிக்குக.

**3.** "இந்து சமய வரலாற்றில் விஜயநகர காலம் தனிச்சிறப்புடையது."

(அ) விஜயநகரப் பேரரசின் தோற்றப் பின்னணியைக் குறிப்பிடுக.

(ஆ) விஜயநகர காலத்தில் நிலவிய சைவம் மற்றும் வைணவம் பற்றி விளக்குக.

(இ) விஜயநகர கால மடங்கள், ஆதீனங்கள் பற்றி விபரிக்குக.

(ஈ) விஜயநகர காலத்துக் கலை மரபுகள் பற்றி ஆராய்க.

## பகுதி II

**4.** "பிரமத்தின் இருமையற்ற தன்மை, உலகத்தின் உண்மையற்ற நிலை, பிரமத்திலிருந்து ஆன்மா வேறுபடாமை என்பவற்றை நிலை நிறுத்துவதே சங்கரரின் அத்வைத வேதாந்த தத்துவத்தின் அடிப்படையாகும்".
இக்கூற்றை அடிப்படையாகக் கொண்டு மேல்வருவனவற்றை விளக்குக.

(அ) சங்கரர் ஏற்கும் பிரமாணங்கள்

(ஆ) அவச்சேதவாதம்

(இ) பிரதிவிம்பவாதம்

(ஈ) விவர்த்தவாதம்

**5.** சைவசித்தாந்தம் கூறும் 'பதி'க் கொள்கையை மேல்வரும் தலைப்புகளில் ஆராய்க.

(அ) சைவசித்தாந்தம் என்னும் சொல்லின் பொருள்

(ஆ) சைவசித்தாந்தத்தில் இறை உண்மை

(இ) சொரூபலக்கணம்

(ஈ) தடத்தலக்கணம்

**6.** "இந்து ஒருவனின் உடல், உள மேம்பாட்டிற்கு யோகதத்துவம் துணைபுரியுமாற்றை ஆராய்க.

[பக். 2 ஐப் பார்க்க

7. "இந்து சமய நெறிகளுள் சாக்தம் தனித்துவமான பண்பாட்டுச் சிறப்புமிக்கதாகும்."
இதனை அடிப்படையாகக் கொண்டு மேல்வருவனவற்றை விளக்குக.
(அ) சாக்தம் என்பதன் பொருள்
(ஆ) ஸ்ரீசக்ர வழிபாடு
(இ) சக்தி விரதங்கள்
(ஈ) சக்தி பீடங்கள்

8. மேல்வருவனவற்றுள் எவையேனும் **நான்கினுக்குச்** சிறுகுறிப்பு எழுதுக.
(அ) திருமூலர்
(ஆ) சிவராத்திரி
(இ) காவடி
(ஈ) அண்ணமார் வழிபாடு
(உ) திருக்கோயில் சித்திரவேலாயுதசுவாமி ஆலயம்
(ஊ) இந்துபோர்ட் சு. இராசரத்தினம்

***